[30th June 1962

**திரு. க. கோமதி சங்கர தீக்ஷதர் :** *தலைவர் அவர்களே! எங்கள் பக்கத்தில் திருவாடுதுறை மடத்தில் பயிர் செய்யும் விவசாயிகள் ஆயிரக்கணக்கான ரூபாய் பணத்தைக் கொடுத்து பயிரிடும் உரிமையை வாங்கி நிலத்தில் இருந்து அப்புறப்படுத்துகிறார்கள். இதில் மடத்து அதிகாரிகளும், மற்றவர்களும் சம்பந்தப்பட்டு இருக்கிறார்கள். ஆகவே விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் உடனடியாக இந்தச் சட்டத்தை அமுல் செய்யும்படி கனம் மந்திரி அவர்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.*

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** *இந்தச் சட்டம் கூடிய சீக்கிரம் அமுலுக்குக் கொண்டுவரப்படும் என்று நான் கூறினேன்.*

***அணைகட்டுதல் (அய்யம்பாளையம்)***

*** 61 கேள்வி.—திரு. வ. ச. சு. மணி :** *கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*மதுரை மாவட்டம், திண்டுக்கல் வட்டம், அய்யன்பாளையம் மலையடிவாரத்தில் இருந்துவரும் நதியின் தண்ணீரை அணை கட்டி தேக்கி பாசனவசதி செய்ய அரசாங்கத்திற்கு உத்தேச முண்டா ?*

**THE HON. SRI P. KAKKAN** : There is no such proposal, Sir.

**திரு. வ. ச. சு. மணி :** *இந்த அணைக்கட்டுத் திட்டமானது 1957-ல் வந்தது. என்ஜினியர் முதற்கொண்டு இதைப் பரிசீலனை செய்து இதனால் ஆயிரக்கணக்கான ஏக்கரா நிலம் சாகுபடி செய்ய முடியும் என்று சொல்லியிருக்கிறார்கள்.*

**MR. SPEAKER** : The hon. Member may please put his supplementary in the form of a question, instead of making a speech.

**திரு. வ. ச. சு. மணி :** *1957-ல் கொண்டுவந்த திட்டம் என் கைவிடப்பட்டது என்று கேட்க விரும்புகிறேன் ?*

**கனம் திரு. பூ. கக்கன் :** *நான் சொன்ன பதிலில் அத்தகைய ஒரு திட்டமே கிடையாது என்று சொன்னேன். கைவிடப்பட்டது என்று சொல்லவில்லை.*

**திரு. வ. ச. சு. மணி :** *அந்தமாதிரி ஒரு திட்டம் 1957-ல் இருந்தது . . .*

**கனம் சபாநாயகர் :** *அதைக் குறித்து நீங்கள் எழுதி அனுப் புங்கள்.*

*Sandalwood trees (Salem)*

*** 62.** *Q.*—**SRI V. SANKARAN** : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether the sandalwood trees in the forest of North Salem have been attacked by any disease; and

30th June 1962]

(*b*) if so, the steps taken to check the spread of this disease?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR: (*a*) Yes, Sir.

(*b*) With a view to checking the spread of a disease known as 'spike', research work is being undertaken by the Forest Research Institute at Dehra Dun and at the Research Station at Bangalore. Madras State is also taking up research work at the Denkanikota Research Centre under the supervision of the State Silviculturist.

**திரு. வை. சங்கரன்:** இதுவரை சுமாராக உற்பத்தி எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்கிறது? அதனால் நஷ்டம் எவ்வளவு இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்ருடியார்:** அநேகமாக நமக்குள்ள சந்தன மரங்கள் அதிக ஏக்காரவில் இல்லை. தானாக வளர்ந்து வருகின்ற மரம். சட்டென்று நோயினால் பாதிக்கப்பட்டு வருகிறது.

**திரு. வை. சங்கரன்:** 'சாண்டலுட் ஆயில்' நமக்கு அந்நியச் செலாவணி தேடித்தரும் பொருளாதலால் அதைப் பரிசீலனை செய்து நோயினின்றும் காப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமா?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்ருடியார்:** 1913-இல் இருந்து இதுவரை நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இன்னும் அதற்குரிய நல்ல மருந்து கண்டுபிடிக்கப்படவில்லை.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி:** சந்தன மரங்களுக்கு வருகின்ற நோய் பல ஆண்டு காலமாக நம்முடைய காட்டு வளத்தை அழிப்பதாகக் கேள்விப்பட்டேன். இங்கிருந்து சில அதிகாரிகளை மைசூருக்கு அனுப்பி, அவர்கள் பின்பற்றி வருகின்ற முறைகளை யாவது அறிந்து வர இந்தச் சர்க்கார் ஏற்பாடு செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்ருடியார்:** இதைத்தான் முன்பே சொன்னேன்.

**திரு. எம். வி. கரிவேங்கடம்:** வடாற்காடு ஜில்லாவில் சர்க்கார் பல சந்தன மரத் தோப்புகளை வளர்த்து வருவதாகத் தெரிகிறது. அங்கும் இந்த நோயினால் பாதிக்கப்பட்டு இருக்கிறதா?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்ருடியார்:** பரவலாக எல்லாவிடத்திலும் இந்தச் சீக்கு இருக்கிறது.

**வாணியம்பாடி (தாலுக்காவாக மாற்றுதல்)**

* 63 கேள்வி.—**திரு. மு. பொ. வடிவேல்:** கனம் பொதுப்பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு ஜில்லா வாணியம்பாடி பகுதியை சப்-தாலுக்காவாகச் செய்வதற்காக அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கை என்ன?